# SYLVESTER AND THE MAGIC PEBBLE
**William Steig**

# சில்வெஸ்டரும் மாயக்கல்லும்

**வில்லியம் ஸ்டீக்**

**தமிழில்: முனைவர் ப. அனிதா**





அன்று விடுமுறை நாளான சனிக்கிழமை. நன்றாக மழை பெய்து கொண்டிருந்தது. மழையில் ஆட்டம் போட்டுக்கொண்டிருந்த சில்வெஸ்டரின் கண்ணில் ஒரு வித்தியாசமான கூழாங்கல் தென்பட்டது. அடர் சிவப்பு நிறத்தில், நெருப்பை போன்று பளிச்சென்று, திரண்ட உருளை வடிவில் இருந்தது. தன்னுடைய கூழாங்கல் தொகுப்பிற்கு மற்றொரு அழகான கல் கிடைத்த உற்சாகத்தில் அதனை கையில் எடுத்தான் சில்வெஸ்டர். கையில் இருந்த கூழாங்கல்லை பார்த்துக் கொண்டிருந்த சில்வெஸ்டருக்கு, புதுமையான கூழாங்கல்லை கண்டெடுத்த பரபரப்பில், திடீரென்று குளிர ஆரம்பித்தது. மழைத்துளிகள் வேறு அவன் மேல் பட்டு, அவனுக்கு குளிர் அதிகமானது. “இந்த மழை நின்றால் எவ்வளவு நன்றாக இருக்கும்” என்று நினைத்தான் சில்வெஸ்டெர்.



ஆச்சரியமாக, அடைமழை சட்டென்று நின்றது. பூமியை நோக்கி விழுந்தவாறு இருந்த மழைத்திரை, நடுவானில் அப்படியே மாயமாகிவிட்டது. கார்மேகங்கள் காணாமல் போய்விட்டன. சுற்றும் முற்றும் இருந்த எல்லாப் பொருட்களும் மழையில் நனைந்த சுவடே இல்லாமல் உலர்ந்துவிட்டிருந்தது.



டன்கனின் வாழ்நாளில் அவனுடைய எந்தவொரு விருப்பமும் இத்தனை விரைவாக நிறைவேறியதே இல்லை. அவனைச் சுற்றி ஏதொ ஒரு மாயாஜாலம் நடப்பதை உணர்ந்தான் டன்கன். அதற்கான காரணம், தன்னிடமுள்ள சிவப்பு கூழாங்கல் தான் என்று யூகித்தான். (அவனுடைய யூகம் சரிதான்!) தன்னுடைய யூகம் சரியானது தானா என்பதை தெரிந்துக்கொள்ள, தன் கையில் இருந்த கூழாங்கல்லை கீழே வைத்துவிட்டு, “இப்போது மறுபடியும் மழை பெய்தால், எவ்வளவு நன்றாக இருக்கும்” என்றான். ஒன்றும் நடக்கவில்லை. பின்னர், அந்தக் கூழாங்கல்லை தன்னுடைய குளம்புகளினால் பிடித்துக்கொண்டு மீண்டும் தன்னுடைய மழை ஆசையைக் கூறியதும், வானம் இருண்டு, இடி மின்னலுடன் மழை கொட்ட ஆரம்பித்தது.



“என்ன ஒரு அதிர்ஷ்டமான நாள் இது” என்று எண்ணினான் சில்வெஸ்டர். இக்கல்லின் மகிமையால் இன்றிலிருந்து நான் வேண்டுவது எதுவாயினும் எனக்கு கிடைக்கும். என்னுடைய பெற்றோருக்கும் வேண்டியது அனைத்தும் கிடைக்கும். என் சொந்தங்கள், நண்பர்கள், எல்லோருக்கும் என்னவெல்லாம் வேண்டுமோ அவையும் கிடைக்கும்.

மீண்டும் வெயில் அடிக்கவேண்டும் என்றும், தன்னுடைய இடது கால் முட்டியில் உள்ள மரு மறைய வேண்டும் என்றும் வேண்டி, இரண்டு விருப்பங்களும் நிறைவேறிய சந்தோஷத்தில் வீட்டை நோக்கி நடந்தான் டன்கன் சில்வெஸ்டர். தன்னுடைய பெற்றோரிடம் தான் கண்டெடுத்த அற்புத கூழாங்கல்லைக் காண்பித்து. அவர்கள் ஆச்சர்யப்படுவதைக் காண ஆவலாக இருந்தான் சில்வெஸ்டர். ஆனால், அவர்கள் அவனை நம்ப மறுப்பதற்கான வாய்ப்பும் உள்ளது என்று அவனுக்கு தோன்றியது.





வீட்டிற்கு செல்லும் வழியில், அவன் “ஸ்ட்ராபெர்ரி ஹில்” என்னும் சிறு குன்றின் மேல் ஏறி சென்று கொண்டிருந்தான். தான் எந்தெந்த பொருட்களெல்லாம் வேண்டும் என்று அற்புதக் கல்லிடம் கோரிக்கை வைக்கலாம் என்று மனதில் பட்டியலிட்டுக் கொண்டே சென்ற சில்வெஸ்டர், தன் முன்னால் உயர வளர்ந்து நிற்கும் புல்வெளியின் நடுவில் ஒரு முரட்டுச் சிங்கம் பசியொடு தன்னை உற்றுப் பார்ப்பதைக் கண்டு திடுக்கிட்டான். பயத்தில் நடுங்கினான். பயத்தில் உறைந்து போய் நிற்காமல் இருந்திருந்தால், தன்னிடம் உள்ள மாயக்கல்லைப் பயன்படுத்தி சிங்கத்தை மாயமாக வைத்திருப்பான், அல்லது தன் வீட்டிற்கு உடனடியாக சென்றுவிட வேண்டும் என்று வேண்டியிருப்பான் சில்வெஸ்டர்.



தன் முன் தோன்றிய சிங்கம் ஒரு பட்டாம்பூச்சியாகவோ, ஒரு ஆடாகவோ மாற வேண்டும் என்று கூட அவன் வேண்டியிருக்கலாம். பல வகைகளில் வேண்டிக்கொள்ள வாய்ப்பிருந்தும், பயத்தினால், பதட்டத்தில் அவனால் தெளிவாக யோசித்து சமயோசிதத்துடன் செயல்பட முடியாமல் போய்விட்டது. “நான் ஒரு பாறையாக இருந்தால் எவ்வளவு நன்றாக இருக்கும்” என்று யோசித்த சில்வெஸ்டர், பாறையாகவே மாறினான்.

சில்வெஸ்டரை நோக்கி பாய்ந்தோடி வந்த சிங்கம், அருகில் வந்ததும், அங்கு ஒரு சிறு பாறை மட்டுமே இருப்பதைக் கண்டு திடுக்கிட்டது. அப்பாறையை மோப்பம் பிடித்து பார்த்தது. பாறையை நூறு முறையாவது சுற்றி சுற்றி பார்த்துவிட்டு, குழப்பத்துடன் திகைத்துப்போய் அவ்விடத்தில் இருந்து சென்றுவிட்டது. “அந்த கழுதைக்குட்டியை தெளிவாக நிச்சயமாக நான் பார்த்தேனே ! ஒரே குழப்பமாய் இருக்கிறதே” என்று எண்ணியது அந்த சிங்கம்.





சிறு பாறையாக மாறிய சில்வெஸ்டர், ஸ்ட்ராபெர்ரி குன்றின் உச்சியில் செய்வதறியாது இருந்தான். அவனுடைய மாயக் கூழாங்கல் அருகில் இருந்தும், அதை தொட்டு எடுக்க முடியாமல் பாறையாக கிடந்தான் அவன். “ஓ! நான், நானாக மாற மாட்டேனா!” என்று வேண்டினான். ஆனால் எதுவும் நடக்கவில்லை. மாயக்கல்லை தொட்டால் தான் சில்வெஸ்டர் நினைப்பது அப்படியே நிறைவேறும். அதனால் ஒன்றும் செய்ய முடியாமல் இருந்தான் அவன். மனதில் ஏதேதோ எண்ணங்கள் தோன்றின. அவனுக்கு கவலையாகவும், பயமாகவும் இருந்தது. நம்பிக்கையிழந்து, ஆற்றாமையில் செய்வதறியாவது தவித்தான். இந்த இக்கட்டான நிலையில் இருந்து வெளிவருவதற்கான சாத்தியக்கூறுகளை யோசித்தான்.



யாராவது அந்த சிவப்பு மாயக்கல்லை கையில் எடுத்து, பக்கத்தில் உள்ள பாறை கழுதையாக மாற வேண்டும் என்று வேண்டினால் ஒழிய தன் நிலைமை மாறாது என்று அவனுக்கு தோன்றியது.

அதனுடைய பளிச்சிடும் சிவப்பு நிறத்தால் ஈர்க்கப்பட்டு கட்டாயமாக அந்த சிவப்பு மாயக்கல்லை யாராவது கையில் எடுப்பார்கள். ஆனால், அதை எடுப்பவர்கள் எதற்காக அருகில் உள்ள கல் கழுதையாக மாற வேண்டும் என்று வேண்டுவார்கள்? அதற்கான சாத்தியம் கோடியில் ஒன்று கூட இல்லையே.

பொழுது சாய்ந்து வானில் நட்சத்திரங்கள் தோன்ற ஆரம்பித்தன. சில்வெஸ்டர் தூக்கத்தில் ஆழ்ந்தான். அவனால் வேறு என்ன செய்ய முடியும்?



விடிந்ததும், சில்வெஸ்டரை காணவில்லை என்று பதறிய அவன் பெற்றோர், அக்கம் பக்கத்தினரை விசாரிக்கத் தொடங்கினர்.



அவர்கள் வீட்டின் அருகிலுள்ள எல்லா சிறுபிள்ளைகளிடமும் விசாரித்தனர். நேற்றைக்கு முந்தைய தினத்தில் இருந்து யாருமே சில்வெஸ்டரை பார்க்கவில்லை என்று கூறினர்.



போலிசிடம் சென்று புகாரளித்தும், அவர்களாலும் சில்வெஸ்டரை கண்டுபிடிக்க முடியவில்லை.



அவ்விடத்தைச் சேர்ந்த எல்லா நாய்களும் ஒன்று கூடி சில்வெஸ்டரை தேடின ஒவ்வொரு கல்லையும், மரத்தையும், புல்லையும் மோப்பம் பிடித்தன.



சுற்றுவட்டாரப் பகுதிகளின் ஒவ்வொரு இண்டு இடுக்கையும் மோப்பம் பிடித்தன. ஆனால் அவனுடைய வாசனை எதுவும் கிடைக்கவில்லை. ஸ்ட்ராபெர்ரி குன்றின் மேல் உள்ள சிறு பாறையையும் மோப்பம் பிடித்துப் பார்த்தன. ஆனால் அதில் பாறைகளுக்கே உரித்தான இயற்கையான வாசம் வந்ததே தவிர, சில்வெஸ்டரின் வாசம் இல்லை.



ஒரு மாதம் முழுவதும் தேடிய இடங்களில் எல்லாம் மீண்டும் மீண்டும் தேடி, விசாரித்த மிருகங்களையே மீண்டும் மீண்டும் விசாரித்து, சில்வெஸ்டரின் பெற்றோர் களைத்துப் போய் விட்டனர். செய்வதறியாது தவித்தனர். இறுதியாக, தங்கள் மகனுக்கு மிக மோசமான ஏதோவொன்று நிகழ்ந்திருக்க வேண்டும் என்றும், அவனைத் தங்களால் இனி பார்க்கவே முடியாது என்றும் முடிவுக்கு வந்தனர்.

ஆனால், இவ்வளவு நாட்களும் சில்வெஸ்டர் தன் வீட்டிற்கு அருகிலேயே தான் இருந்தான்.



சில்வெஸ்டரின் பெற்றோர், தங்களுடைய அன்றாட வேலைகளைச் செய்து கொண்டு, முடிந்தவரை சகஜமாக இருக்க முயன்றனர். ஆனால், அவர்களுடைய அன்றாட வாழ்க்கையின் மையப்புள்ளி சில்வெஸ்டராக இருந்ததால், செய்யும் ஒவ்வொரு காரியத்திலும் அவனுடைய ஞாபகம் வந்து, அவர்களைத் துன்புறுத்தியது. அவர்கள் மிகுந்த துயரத்தில் ஆழ்ந்தனர். சில்வெஸ்டர் இல்லாத அவர்களுடைய வாழ்க்கை அர்த்தமற்றதாக தோன்றியது.



இரவும் பகலும் வந்து போனது. காலம் சுழன்றது. குன்றின் மேல் சில்வெஸ்டர் முழித்துக் கொண்டிருக்கும் நேரம் குறைந்துக் கொண்டே போனது. முழித்துக் கொண்டிருக்கும் நேரத்திலும், நம்பிக்கையற்று வருத்தத்துடன் இருந்தான்.



தன் வாழ்நாள் முழுவதும் பாறையாகவே இருக்க வேண்டியதுதான் என்பதை ஏற்றுக்கொண்டு, தன்னுடைய இந்த நிலைமைக்கு பழகிக்கொள்ள முயற்சித்தான். இடைவிடாத ஆழ்ந்த உறக்கத்திற்குச் சென்றான். பருவங்கள் மாறி, குளிர் வாட்டியெடுக்க ஆரம்பித்தது, இலைகள் நிறம் மாறத் துவங்கின, இலையுதிர் காலம் ஆரம்பித்தது. இலைகள் உதிரவும், புற்கள் தரையை நோக்கிச் சாயவும் துவங்கின.



அடுத்து குளிர்காலம் தொடங்கியது. குளிர் காற்று வீசியது. பனிப்பொழிவும் ஆரம்பித்தது. கடும்குளிரில் எந்த விலங்கும் தன்னுடைய இருப்பிடத்தில் இருந்து வெளியே வரவில்லை. இந்நாட்களை எதிர்நோக்கி தாம் சேமித்து வைத்திருந்த உணவை உண்டு, தத்தம் வீடுகளிலேயே முடங்கிவிட்டன.



துணையின்றி, தனியாக குன்றின் மேல் இருந்த பாறையான சில்வெஸ்டருக்கு ஒரு நாள் மட்டும் ஒரு ஓநாயின் துணை கிடைத்தது. அந்த ஓநாய் சில்வெஸ்டர் மீது உட்கார்ந்து கொண்டு, பசியினால் வெகுநேரம் ஊளையிட்டுக் கொண்டிருந்தது.



குளிர் காலம் முடிவடைந்ததின் அறிகுறியாக உறைபனி உருக ஆரம்பித்தது.



வசந்தகாலம் துவங்கியதன் அறிகுறியாக பூமி கதகதப்பாகி, மரங்களில் மீண்டும் இலைகள் தோன்றி, செடிகளில் மலர்கள் அரும்ப ஆரம்பித்தன.



மே மாதத்தின் ஒரு நாளில், சில்வெஸ்டரின் தந்தையான டன்கன், தன் மனைவியை தன்னுடன் சுற்றுலா வருமாறு வற்புறுத்தினார். ‘நாம் உற்சாகமாக இருக்க முயல்வோம்” என்றார் அவர். “சில்வெஸ்டர் இல்லாத வாழ்க்கையை வாழ நாம் முயல்வோம். நமது தேவதை நம்முடன் இல்லாவிட்டாலும், முடிந்தவரை சந்தோஷமாக இருக்க முயல்வோம்” என்றார். வீட்டிற்கு அருகிலேயே ஸ்ட்ராபெர்ரி குன்று இருப்பதால், அன்றைய பொழுதை கழிக்க இருவரும் அங்கு சென்றனர்.



குன்றின் மேல் ஏறிய சில்வெஸ்டரின் தாய் அங்கிருந்த சிறு பாறையின் மீது உட்கார்ந்தார். தாயின் ஸ்பரிசம் தன் மீது பட்டதும், சில்வெஸ்டர் தன் நீண்ட குளிர்கால தூக்கத்தில் இருந்து முழித்துக்கொண்டான். “அம்மா, அப்பா, நான் தான் உங்கள் சில், நான் இங்கே தான் இருக்கிறேன்” என்று கூச்சலிட ஆசைப்பட்டான். ஆனால் பாறையாக மாறிப்போன அவனால் பேச இயலவில்லை.



டன்கன் குன்றை சுற்றிப்பார்க்க சென்றார். திருமதி. டன்கன் தான் கொண்டு வந்திருந்த வகைவகையான சிற்றுண்டிகளை அந்த சிறுபாறையின் மேல் உண்பதற்கு தயாராக எடுத்து வைத்தார். சுற்றும் முற்றும் வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்த டன்கன் எதேச்சையாக அருகில் பளிச்சென்று மின்னிக்கொண்டிருந்த சிவப்பு கூழங்கல்லை பார்த்தார். “எவ்வளவு அழகான கல். சில்வெஸ்டர் இருந்திருந்தால், தான் சேமித்து வைத்துள்ள கற்குவியலுக்கு மற்றொரு அழகான கல் கிடைத்துவிட்டது என இக்கல்லை சேமித்து வைத்திருப்பான்” என்றார். அந்த சிவப்புக் கல்லை எடுத்து பாறையின் மேல் வைத்தார்.



திருவாளர், திருமதி டன்கன் இருவரும் கொண்டுவந்திருந்த சிற்றுண்டியை சாப்பிட உட்கார்ந்தனர். சில்வெஸ்டர் முழுவதுமாக முழித்துக்கொண்டான். தன் பெற்றோர் பேசுவதை உன்னிப்பாக கேட்கத் துவங்கினான். சில்வெஸ்டரின் தாய், வினோதமாக, படபடப்பாக உணர்ந்தார். “எனக்கென்னவோ, நம்முடைய சில்வெஸ்டர் இங்கு தான் எங்கேயோ, உயிருடன், நமது அருகிலேயே இருப்பது போல் தோன்றுகிறது” என்றார் அவர். இதைக் கேட்டுக் கொண்டிருந்த சில்வெஸ்டருக்கு “ஆமாம், ஆமாம்! அம்மா நீங்கள் சொல்வது சரியே” என்று கத்த வேண்டும் போல் இருந்தது. ஆனால், அவனால் முடியவில்லை. மாய சிவப்புக் கல் தன் மீது தான் உள்ளது என்பதை மட்டும் அவன் உணர்ந்திருந்தால்?

"ஓ! இந்த அழகான நாளில், சில்வெஸ்டர் மட்டும் நம்முடன் இருந்திருந்தால்" என்று ஆதாங்கப்பட்டார் அவனுடைய தாயார். அவனுடைய தந்தை சோகமாக தரையை நோக்கி தலையை தாழ்த்திக்கொண்டார். "உங்களுக்கு அப்படி தோன்றவில்லையா?" என்று திருமதி. டன்கன் கேட்க, "உன்னால் எப்படி இவ்வாறு கேட்கமுடிகிறது?" என்று கேட்பது போல, தன்னுடைய மனைவியை நிமிர்ந்து பார்த்தார் டன்கன்.

சில்வெஸ்டரின் பெற்றோர் இருவரும் மிகுந்த சோகத்தில் ஒருவரை ஒருவர் பார்த்துக்கொண்டனர். தன்னுடைய பெற்றோரின் அதீத துக்கத்தை தாங்க முடியாமல், சில்வெஸ்டர், "நான் நானாக மாற மாட்டேனா? நான் என்னுடைய சுய உருவத்திற்கு மாற மாட்டேனா?" என்று வேண்டினான்.

தன் மேலிருந்த சிவப்பு மாயக்கல்லின் மகிமையால் ஒரு நொடியில், பாறையாக இருந்த சில்வெஸ்டர் கழுதைக் குட்டி சில்வெஸ்டராக மாறினான்!





“அடுத்து நிகழ்ந்த யாவும் உங்களால் கற்பனை செய்ய முடிகிறது அல்லவா?” டன்கன் குடும்பத்தினர் ஒருவருக்கொருவர் ஆரத்தழுவி, முத்தமிட்டு, மீளா ஆச்சர்யத்தில் கேள்விகள் கேட்டு, பதில் சொல்லி எல்லாம் நடந்தேறியது.



பின், மூவரும் கொஞ்சம் அமைதியாகி, வீட்டிற்குத் திரும்பினர். வீட்டில் உள்ள இரும்பு அலமாரியில் அந்த சிவப்பு மாயக்கல்லை வைத்து பூட்டினார் டன்கனின் தந்தை. என்றாவது ஒரு நாள் அது அவர்களுக்கு தேவைப்படலாம். ஆனால், இப்பொழுது அவர்கள் மாயக்கல்லிடம் வேண்டிக்கொள்ள என்ன இருக்கிறது? அவர்களுக்குத் தேவையான எல்லாமும் அவர்களிடம் இருந்தது.

*முற்றும்*